# Taṉavaiciya ūḻiyaṉ

## Malar 1, itaḻ 13

## December 10, 1920

Record no. 148

உ
சிவமயம்.

தந்திவிலாஸம்—"Oolian." Regd. No. M. "Dhana Vysia Oolian"

# தனவைசிய ஊழியன்

வெள்ளி தோறும் வெளிவரும்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான் முந்துறும்—திருக்குறள்.

மழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர். க காரைக்குடி ரௌத்ரி-ஹூ கார்த்திகைமீ உருவ (கO—கஉ—ககூஉ0) இதழ் கக.

## உறுதிவேண்டும்.

சகோதரர்களே!

எந்த விஷயத்தைச் செய்யநினைத்தாலும் செய்தாலும் மன உறுதி வேண்டும். மனவுறுதியில்லாவிட்டால், பின் ஏதாவது ஒரு காரணம் பற்றி மனத்தளர்ச்சி உண்டாகிக் கார்ய சித்தியடையாததோடு, சஞ்சலத்திற்கும் உள்ளாகவேண்டி நேரிடும். மனவுறுதி கொண்டே எல்லாம்வல்ல இறைவனைத் தியானிக்கவேண்டும்; முத்திபெறல்வேண்டும். மனவுறுதியினாலேயே இறைவன் திருவடி நிழலையடைந்த உண்மையாளர்கள் பலருளர். மற்றும் வியாபாரமுறையில் தானென்ன! மனவுறுதிவேண்டாமா? இலாப நஷ்டத்திற்கு உடன்பட்டே வியாபாரஞ்செய்ய ஆரம்பிக்கிறோம். ஏதோ ஒருவகையில் கிஞ்சிற்று நஷ்டமேற்பட்டு விட்டதானால், நஷ்டங்காரணமாக மனந்தளர்ந்து கிலேசமுற்றுக் கொண்டேயிருந்தால், பின் செய்யவிருந்த முறைகளெல்லாம் தவறி, எல்லாம் அனர்த்தமயமாகத்தோன்றி, நஷ்டத்திற்கு ஈடுசெய்ய இயலாது; துன்பத்தினால் சரீர இயலும் குன்றி, கஷ்டப்படத்தான் வேண்டிவரும். தொழிலில் இப்படி யேற்படுவது ஸகஜந்தான்; அதற்காக எல்லாவற்றையும் விட்டுவிடுவதோ? "இன்னொருவழியில் முயற்சிசெய்யவேண்டும்; கவனமாயிருப்போம்; மனந்தளர்க்கூடாது" என்று தேறுதலடைந்து முற்படுவதல்லவோமுறை? ஆகலான், எதற்கும் மனவுறுதி வேண்டுவதுபோல அதற்கும் மனவுறுதி வேண்டற்பாலதே. இன்னும், "எதை எடுத்தாலும் அதில் அளவற்ற ஆசைவைப்பது." இது ஒரு பெரிய விஷயம். அப்பப்பா!! கண்டவற்றிலெல்லாம் ஆவல், ஒரு அளவுகிடையாது. மனம் எங்கெங்குச் செல்கிறதோ, அங்கங்கெல்லாம் செல்லவிட்டு, மூளைவெடிக்க ஏதேதோ யோசித்து, அதன்படி நிறைவேறாததுகண்டு, வஞ்சம் பொறாமை தன்னலம் என்ற பெரும் படுகுழிகளில் விழுந்து துன்புறுவது. எதற்கும் ஒரு அளவு வேண்டுமல்லவா? ஆகையினாலே, ஆசையை அதிகரிக்கவிடாதிருப்பதற்கும் மனவுறுதிதான் வேண்டும். இன்னும் "அந்த நல்ல மனிதரை இரண்டுநாள் முன்கண்டு பேசினேனப்பா; 'இன்புளுபன்ஸா' ஜுரங்கண்டு இன்று இறந்துவிட்டாராம்; என்னப்பா? இது அநியாயமாக இருக்கிறது; ஐயோ! இப்படித்தானே எல்லோருக்குமிருக்கும்! நினைத்துப்பார்க்கும்பொழுது நிச்சயமேயில்லை; இதற்குள்தானே மனிதர்கள் ஏதேதோ எண்ணி என்னென்னவோசெய்கிறார்கள்!" என்று பிரலாபித்துச் சொல்லும் மனிதர், "இனிமேல்தான் மிகமிக உயர்ந்த—நல்ல—தர்மமான காரியங்களையே செய்தல் வேண்டு" மென்று தீர்மானித்த சிலநாழிகைக்குள்ளே மனந்தடுமாறி, மயான வைராக்கியம் என்றபடி மனதை விஷயத்திற்கு அடிமைப் படுத்திவிடுகிறார்கள். பாவம்! எதை நிச்சயமான தர்மமென்று உள்ளபடியே உணர்ந்தோமோ அதைச்சாதிக்கவும் மனவுறுதி தான்வேண்டும். இப்பொழுது "நம் தூய்மையான சமூகத்தில் நல்ல மணமகன் பார்த்து விவாகம் செய்து கொடுக்கவேண்டிய பெண்ணிற்கு விலை வாங்குவது சாஸ்திரத்திற்கும் நம் குலவிர்த்திக்கும் அறிவு உலகத்திற்கும் பொருந்தாதில்லை" யென்றுணர்ந்த நம் சகோதரர்களுங்கூட, "இனிப்பெண்ணிற்கு விலைவாங்குவதில்லை" யென்று மனவுறுதி கொண்டுவிட்டார்களானால், பேதைப் பெண்கள் சொல்வதையும் மெச்சுவதையும் உத்தேசித்து ஏராளமான சாமானும் வியர்த்தச்செலவும் செய்யப் பெரும் பணம் பெற்றுத்தாமும் வைத்துக்கொள்ளாது, பிறருக்கும் சிரமத்தைத்தந்து விவாகஞ்செய்ய ஒருப்படுவரோ? மற்றும், நன்மை தின்மை விசேஷங்களில் நடக்கும் வீண் செலவுகளையும் நம்மவர்களுக் குள்ளேயே சட்டி பெட்டி செம்பு லோட்டா தட்டு மரவை துண்டு விசிறி நாமக்கட்டி புத்தகம் கரண்டி துடுப்பு கத்தி கண்ணாடி சோப்பு சீப்பு கருது (கதிர்) ஊசி நூல் மக்குப்பொம்மை பச்சைஅப்பளம் வாழைக்காய் எண்ணிக்கொடுக்கும் பலகாரம் இன்னுஞ்சில பலகாரத்திற்காகக் காகமுதலிய அர்த்தமில்லாதன—அநாகரீகமான—வீணான—எல்லோராலும் வெறுக்கப்படுவனவானவற்றை வாங்கவும், பின் தன் வீட்டில் வரும்விசேடத்தில் இதற்குமேல் சாமான் வாங்கிக்கொடுத்து அசட்டுப்பெருமை பெற அலைந்து திரிந்து சேகரித்துத்திரும்பக்கொடுக்கவும் விரும்புவரோ? இவையெல்லாவற்றையும் நிறுத்த வேண்டுமென்று, பலருக்கும் நினைவிருக்கிறதே தவிர, கார்யத்தில் அதிகப்பட்டுக்கொண்டே வருகிறது. இதை நியாயப்படி கையாள உறுதியாளர்கள் வேண்டும். முடிவாக நாம், எதை உண்மையென்று—நியாயமென்று—நலமென்று ஆய்ந்தோய்ந்து பார்த்து முடிவு செய்து விடுகிறோமோ, அதைச்செய்யப்பின்வாங்காது நடத்த முன்வருவதே ஆண்மைத்தனத்துக்கு அழகு. 'நன்மையானது தான்' என்று தன் மனச்சாட்சி சொல்லுமேல், அதை மறைத்து, நியாயத்தை அநுசரிக்கும் உண்மையாளர்களுக்குக், கேடுசூழ்பவன் மனிதனாகக் கருதப்படமாட்டான். அப்படிக்கெடுக்க நினைப்பது பேடிகளின் குணம். கேவலம் மிருகத்தின் சுபாவம். ஆண்தன்மையும் சத்தியமும் தைர்யமும் கொண்டவர்கள் அவர்களை லட்சியம் செய்வரோ? செய்யவே மாட்டார்கள்; பேடிகள் பேதைப் பெண்கள் சொல்வதைக் கூடத்தடுத்துரைத்து நியாயம்செய்ய அஞ்சுவார்கள்; நியாயத்தைக்கடைப்பிடித்தவர்களோ அதற்கு விரோத

மாகத் திரித்து யார்எதைச் சொல்லி னும் பொருட்படுத்த மாட்டார்கள். ஏன்? 'இன்னல் வந்துற்றிடும் போததற்கஞ்சோம்' என்ற பிர மொழியைக் கடைப்பிடிக்கும் வீரர் களல்லரா? உண்மைதானே! இப் படிப் பலவிஷயங்களில் உறுதிகாட்டி நம்மவரின் புராதனப் பெருமையை நிலைநிறுத்த நியாயநெறிபற்றிப மனோ திடமும் அசையாத மனவுறுதியும் வேண்டும்.

பிச. சுப்பிரமணியன்
அமராவதிபுதூர்.

## சட்டசபை எலெக்ஷன்.

இவ்வூரில்திங்கட்கிழமைசென்னைப் புதியசட்டசபைக்கும் டில்லீச் சட்டசபைக்கும் எலெக்ஷன் நடைபெற்றது. சிலவாரங்களாகவே மிஸ்டர் துளசிராம், சிவகங்கைவக்கீல் மிஸ்டர் முகுந்தராஜய்யங்கார் வகையரா ஆட்கள் இங்குவந்துஆயிரக்கணக்கான துண்டுப்பத்திரிகைகளை வெளியிட்டுஊரைக் கலக்கிவிட்டனர். மிஸ்டர் ம. சீனிவாசய்யங்காருக்காக இங்குள்ள தனவைசியப்பிரபுக்கள் பலமான முயற்சி செய்தனர். என்றாலும், ஓட்டுக்கொடுக்கப்போனவரின் தொகைமிகச் சொற்பமே. முயற்சிமட்டும் மிகப் பலமாக இருந்ததேயன்றிப் பயன் மிகக்குறைவுதான். ஸ்ரீமான் முகுந்தராஜய்யங்காரவர்களைப் பற்றி எழுதும்போது. "பொதுஜனங்கட்குழைக்கும்" என்று குறிப்பிடப் பட்டிருந்தது குறிப்பிடத்தகுந்தது. இப்பொழுது சட்டசபைகள் விஷயமாக "ஸ்ரீமாங் கஸ்தூரிரங்கய்யங்கார் முதலியவர்கள் கூறுவது சரியா? அல்லது மகாத்மா காந்தியடிகள் ஆஞ்ஞை யிடுவது சரியா? என்று ஆராயப் புகவில்லையாயினும், சட்டசபைகளில் கம்பீரத் தோற்றமும் தைரியமும் மிக்கஅநுபவமும் பொருந்திய பண்டித மதன்மோகன மாளவியாவினலும் தேசாபிமானசிம்ங்களாகிய படேல் கபர்தே சேலம் விஜயராகவாச்சாரியார் முதலிய சட்டசபைத்தீரர்களினாலும் முடியாத காரியங்களை இவர்கள் சாதித்து ஜனங்கட்கு நன்மைசெய்து விடுவார்களென்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. இப்படியேதான் ஜனங்கட்கும் நம்பிக்கையில்லையென்பதையும் அறிவேன். இப்போது ஓட்டுகொடுக்கப்போன சிலரும் எதற்காகப்போட்டிருக்கிறார்களென்றால், சட்டசபை அபேக்ஷகர்களில் சிலர் இங்குள்ள தனவைசியர்கட்கு முக்கியமான வக்கீல்களாதலாலும், இப்பொழுதுங்கூட அவர்கள்கையில் பலருடையகேஸ்கள் அஜரிலிருக்குமாதலாலும், அவர்களால் தங்கேஸ்களை வாதிக்கச்செய்தவர்களாகவும் வாதிக்கச்செய்யவேண்டியவர்களாகவுமிருப்பதாலும், பலர்க்கும் பிரார்த்தசெய்த தன் பலனைத்தான் போட்டிருக்கிறார்கள். அவ்வாறல்லாமல் ஜனங்களுடைய நன்மைக்காக மிகப்பாடுபட்டுச் சட்டசபைகளை ஜனங்களின் பக்கம் திருப்பிவிடுவார்களென்று நம்பி ஒருவரும் போட்டிருக்கமாட்டார்களென்று நான் உறுதியாகக் கூறலாம். இந்த நிலையில் காங்கரஸ் தீர்மானத்தைமீறிச் சட்டசபைகளில் போய் உட்காருவதைக் காட்டிலும், நல்லவரும்படியுள்ள வக்கீல்கள் நாட்டுக்கோட்டையாரின் சமீபத்திலிருந்து இனிமையாகவாழ்வதே நான் நலமென்றுஎனக்குத்தோன்றுகிறது. சட்டசபையில் போய் உட்கார்ந்த பிறகும், ஜனங்கட்குச் சார்பில் உறுதியாகப் பேசாதவரையில், ஜனங்கள் மதிக்க மாட்டார்களென்பதும், அப்படி உறுதியாகப்பேசினால் ஆங்கில உத்தியோகஸ்தர்கள் மதிக்கமாட்டார்களென்பதும் கண்கூடாக்கண்ட உண்மையாகும். நிற்க,

இப்போது நடைபெற்ற எலெக்ஷனில் சிலருடைய மோட்டார்கார்களும் சிலருடைய குதிரைவண்டிகளும் பலமுறை ஓட்டர்களையேற்றிக்கொண்டு போயினவென்றும், அதிலேறியிருந்தவர்கள் முன் பின் மோட்டாரில் உட்கார்ந்தறியாதவர்களென்றும், அப்படி யேற்றி வந்த வண்டிகளின் நம்பரைப்பலர் குறித்துக் கொண்டிருந்தனரென்றும் சொல்லப்படுகிறது. ஓட் செய்யப் போனவர்கட்குப், போடுவதாற் பிரயோசனமில்லையென்று சிலசிறுவர்கள் சொன்னார்களென்றும், அப்படிப் பேசிக்கொண்டுநின்ற ஓட்டர்களை ஓட்பெற முன்னிற்பவரின் ஏஜண்டுகள் மடியைப்பிடித்து இழுத்துச் சென்றார்களென்றும் கூறப்படுகிறது.

காரைக்குடிவாசி,

## நமது சமூக சகோதரர்களுக்கு ஓர் அறிக்கை.

எல்லாம்வல்ல இறைவனருளால் நமது சமூகம் சீர்திருத்தமடைய வேண்டியதற்குமுயற்சிசெய்யவேண்டிய காரியங்கள் நிரம்ப இருப்பினும், அவற்றுள் தற்காலம் முதன்மையாக முயற்சிக்க வேண்டிய தொன்றே. அதனை நம்சகோதரர்கள் முன்னரே கூறியுள்ளார்களாயினும், ஒருகார்யத்தை ஒருமுறை இருமுறை மும்முறையினுங்கூட முடிவுக்குக் கொண்டுவருவது அசாத்பமாகும். பன்முறையும் பகர்ந்து, அதன் உண்மையைப் பலருக்கும் நன்கு விளக்கிக் காட்டிப்பற்றித் தொடர்ந்தால், பலிக்காமற் போகாதென்று நினைத்துயானும்அதனைபேநமது "தனவைசிய ஊழியன்" மூலமாக வெளியிடமுன் வந்திருக்கிறேன்.

நமது சமூகம் முன்னேற்றத்தையடைய வேண்டியதற்கு உறுதிப்பாடாக விடாமுயற்சியுடன் நாம்செய்துவரவேண்டிய விஷயமாவது:—நமது சமூகத்தில் பெண் விற்பனை செய்யும் பெருங்கொடுமையான தொழிலையும் அதனாலேற்படும் வீண்செலவுகளையும் நிறுத்த வேண்டுவதே. அப்படி நிறுத்தி நிலைபெற்று விட்டால், நமது சமூகம் அனேகமாய்ச் சீர்திருந்திவிட்டதாகவே சொல்லலாம். நமது சமூகத்தில் குழந்தையில்லாத ஒவ்வொரு குடும்பத்தினரும், குழந்தையைப்பெற வேணுமென்ற ஆசையோடு இராமேச்வரம் முதலிய தலயாத்திரை யென்ன—சுவாமிகளுக்கு அபிஷேக ஆராதனையென்ன—இவைகளை யெல்லாம் செய்து, அதனால் கிடைக்கும் குழந்தைகளில் பெண் மகவைப்பெற்றோர்கள், தாங்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டுப் பெற்றுவளர்த்ததைத் நினையாது, புத்திர வாஞ்சையையும் மறந்து, விவாக காலத்தில், 'அப்பெண் வாழ்க்கைக் குரித்தாகுமிடம் நல்லதா கெட்டதா' வென்று கூட யோசிக்காமல், 'பெண் கஷ்டதிசையிலிருந்தாலும் சுகத்தையனுபவித்தாலும் நமக்கென்ன பணம் தான் வேண்டு', மென்ற எண்ணத்தோடு, அவர்களை மிருக சாதிகளைப் போலவும் பக்ஷி சாதிகளைப்போலவும் வியாபாரச் சரக்குகளைப் போலவும் விலைபேசி, விலைகூடுதல் குறைச்சல் பார்த்துப்பொருள் நிரம்பக்கிடைக்குமிடத்தில் விற்று, திரவியத்தைப் பெற்று, வெட்கமற்றுச்செய்யும் இக் கொடுமையான செய்கையை நினைத்தால், அந்தோ பரிதாபம்! பரிதாபம்!! நம் சமூகம் எவ்வளவோ மேன்மையாக வாழ்ந்து நீதியோடிருந்ததாகவும், சத்காரியங்களைக் கைக்கொண்டிருந்ததாகவும், நமது சமூக முன்னோர்களாலும் சரித்திர மூலமாகவும் நாமெல்லோரு மறிகிறோம். அப்படி நல்ல நிலைமையோடிருந்த நம் சமூகத்தில் இவ்விதமாகியகொடுமையானசெய்கைகளைத் தலைக்காட்டாதபடி அடியோடு நிறுத்திவிடவேண்டும். அதுமட்டுமல்ல; நம் சமூகத்தில் செய்யும் விவாகம் முதலிய விசேஷங்களில் அனாவசியமாகவும் டம்பமாகவும் கணக்குக்கு மிஞ்சியும்செய்யும் வீண்செலவுகளையும் நிறுத்துவதற்கு, நமது சமூகம் மகாநாடுகூடி, "இவ்விதம் செய்வது நல்லது. இன்னமாதிரி செய்வது கெட்டது. இப்படி நடக்கவேண்டு" மென்று பலருக்குந்தெரியச்செய்து, சீர்கேடுகளை நீக்கி, சீர்திருத்தங்களுக்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்து, ஒரு முடிவுக்குக் கொண்டுவந்தால், கூடியசீக்கிரம் நமது சமூகம் சீர்திருந்தி முன்னேற்றத்தையடைந்து நல்ல நிலைமைக்கு வந்துவிடுமென்பதில் யாதொருசந்தேகமுமில்லை. நமது சமூக மகாநாடு கூடுவதென்றால், எளிதில் சாத்யமாகாதென்று சிலர் நினைக்கலாம். சகோதரர்காள்! முயற்சித்தால் முடியாத தொன்றில்லை. நானும் மகாநாடுகூட வேண்டுமென்று எழுதுகிறேன். சகோதரர்கள் பலரும் அப்படியே நினைக்கிறார்கள். நினைத்தும் எழுதியும் ஆவதில்லை. முயற்சி வேண்டும். ஒவ்வொரு சகோதரர்களும் 'நான் முந்தி நான் முந்தி' யென்று சமூக மகாநாடு கூடும் விஷயத்தில் விடாமுயற்சியுடன் ஒத்துழைத்து, கூடிய சீக்கிரம் நல்ல நிலைமைக்கு வருவதற்கு ஒரு முடிவு செய்வார்களென்று நம்புகிறேன்.

வயி. ஏ. ஏகப்பசெட்டி,
பெல்லனர்,



## சமயப் பகுதி

### பிள்ளையார் நோன்பு என்னும் விநாயகசட்டி விரதம்.

ஸ்ரீமாந் ராம. சொக்கலிங்க ஐயா அவர்கள் எழுதுகிறார்கள்:—

இது கார்த்திகைமாசத்துக் கிருஷ்ண பக்ஷப்பிரதமைமுதல் மார்கழிமாசத்துச் சுக்கிலபக்ஷசட்டியீறாகிய இருபத்தொரு நாளும் விநாயகரைக் குறித்து அநுஷ்டிக்கும் விரதமாம். இதில் இருபத்தோரிழையாலாகிய காப்பை ஆடவர்கள் வலக்கையிலும் பெண்கள் இடக்கையிலும் கட்டிக்கொண்டு முதலிருபதுநாளும் ஒவ்வொருபொழுது போசனஞ்செய்து இறுதிநாளாகிய சட்டியில் உபவாசஞ்செய்தல் வேண்டும்.

இவ் விரதம் அநுட்டித்து உயர்வடைந்தோர் பலர். முன் வித்யுன்மாலியென்னும்அரசன் அநுட்டித்து வியாதிநீக்கமும் வச்சிரதேகமும் பெற்றுத் திலோத்தமையை மணந்து அநேகபுத்திரர்களைப் பெற்று முடிவில் சரீரத்தோடு கைலாசத்தை அடைந்து திவ்யபோகங்களைஅநுபவித்து அதன்மேலும் மோக்ஷம் பெற்றான்.

பூர்வம் உமாமகேஸ்வரருடைய சதுரங்கலீலையில் மகேஸ்வரர் உமையை வெல்லாதிருக்க வென்றுரைசொன்ன தோஷத்தால் சர்ப்பமாகும்படி விஷ்ணுமூர்த்தி உமையினாற் சபிக்கப்பட்டு அவ் வுமையினருளால் தனுர்மாசத்துச் சுக்கிலபக்ஷத்துச் சட்டிதிதியிலே விநாயகதரிசன சாபவிமோசனம் பெற்றுத் தமதுபழையதெய்வபதத்தை அடைந்தாரென்றும், அத்தினத்தில் விரதிகளாய் விநாயகரை பூஜித்தவர்கள் சகல துன்பங்களும் நீங்கி இஷ்டசித்திகளைப்பெற்று இன்புறுமாறு அப்பொழுதே விநாயகரிடத்தில் அவ் விஷ்ணு வேண்டிக்கொள்ள அப்படியே அநுக்கிரகித்தார் என்றும் சொல்லப்படுகிறது. இதனை, பின்வருங்கந்தபுராணத்திரு விருத்தங்களிற் காண்க.

புக்கதொரு பொழுதிலங்கண் முந்தோ
ராலம், பொங்கினிடை யிருந்தமலன்
பொற்றாளன்னி
மிக்கதவம் புரிமாலைங் கரத்துமுன்னோன்
மேவியது மனங்கொண்டு
விரைவி னங்கே
யக்கணமே யெதிர்சென்று வழுத்திக்
காண, வம்மையளித் தருள்சாப
மகற லோடும்
சக்கரமே முதலியவைம் படைகளேந்தித்
தனதுதொல்லைப் பேருருவந்
தன்னைப் பெற்றான்.

மாலோன்றால் அருவுதன்பான் மேவக்
கண்டு, மகிழ்சிறந்து சிவனருளை
மனங் கொண்டேத்தி,
மேலோன்றன் முன்னரெய்தி வணக்கஞ்
செய்து, மீண்டுமவன் றனைத்துதித்து
விமல நீயென்
பாலோங்கு பூசனைகொண் டருளல்வே
ண்டும், பணித்தருள்க வாதிபரா
பரத்தின் பாலாய்
மூலோங்கா ரப்பொருளா யிருந்தாண்
முன்ன மொழிந்தருள்சா பந்தொலைத்த
முதல்வ வென்றான்.

ஐங்கரன்றான் மாலுரைத்த மாற்றங்கேளா
வன்னதுசெய் கெனவருளி
யங்கண் மேவக்
கொங்குலவு மஞ்சனநீர் சாந்தமாலை
கொழும்புகையே முதலியன
கொண்டு போந்து
சங்கானர் மதலைதனை யருச்சித்தன்பாற்
றுவறுபண் ணியம்பலவும்
சால்பிற்றந்து
பொங்கியபா லவியினொடு முன்னமார்த்தி
போற்றியே யிஃதொன்று
புகல லுற்றான்.

விண்ணும் புகலின்ற திங்கடன்னின்
மிக்கமதி தனிலாறும்
பக்க மாகு
மிந்நாளில் யானுன்னை யருச்சித்திட்ட
வியற்கை போல் யாருமினி
யீறி லாவுன்
பொன்னரு மலரடியே புகலென்றுன்னிப்
பூசைபுரிந் திடவுமவர்
புன்க ணெல்லா
மன்னாளே யகற்றிநீ யுலவாச்செல்வ
மளித்திடவும் வேண்டுமிஃ
தருள்க வென்றான்.

மாயனுரை கேட்டலுமே மொழிந்தற்றாக
மகிழ்ந்தன னின்பூசையென்ன
மதித்துக் கூறி
யாயவனு மயன்முதலா வுள்ளோர்யாரு
மன்பினொடு வழுத்திசைப்ப
வாகு வெனாதர்
நன்றொருவ் திரிவித்திக் கணங்களா
னோர், சூழ்ந்துவரக் கயிலையெனுந்
தகவர் வெற்பி
னேயமுடன் போந்தரனை வணக்கஞ்
செய்து, நீடருள்பெற்றே தொல்லை
நிலயத் துற்றான்.

சுத்தோபவாசமிருக்க முடியாதவர்கள் சரீர சக்திக்கேற்பஆகாரங்களைச் சுருக்கிக் கொள்வது பலவிதமுண்டு.

இரவிலும் சயனிப்பதானால் சுத்தமான சயனத்திற் சயனித்தல்வேண்டும்.

துஸ்ஸொப்பனம் நிகழ்ந்தால் மறுநாள் கணேசாது மூலமந்திர ஜபமுதலியவற்றால் பரிகரிக்கப்படல்வேண்டும்.

சட்டிக்கு மறுநாள்காலையில் ஸ்நானநித்தியகர்மானுஷ்டானமும் விநாயகவழிபாடும் முடித்து சத் பிராமணபோஜனம் மகேஸ்வரபூசனை செய்வித்தேனும் சிவபக்தர்களோடு கூடஇருந்தேனும் விநாயகரைச் சிந்தித்துக்கொண்டு பாரணம் செய்தல்வேண்டும்.

விரதங்களெல்லாவற்றுள்ளும் இது முதன்மையுடையது.

நமது சமூகத்தார் பூர்வகாலத்தில் தமது பூர்விகஸ்தானமாகிய மாகதவிநாயகரை வருடம்பூராகவே நியமபரர்களாய் உக-நாளும் பூஜித்துச் சட்டிதினம் சுத்தோபவாஸர்களாயிருந்து மறுநாள்பூர்த்தி செய்து இதனை முக்கிய குல தர்மமாக அநுஷ்டித்துவந்தார்கள்.

நம்மவர்கள் பாண்டிமண்டலம் வந்த பின்பு காலக்கிரமத்தில் சட்டிதினமாத்திரம் விரததினமாகக்கொண்டு அதிலும் சில நியமங்கள்நழுவவிட்டு விரதம் என்பதைமாத்திரம் விடாது இன்னும் அநுஷ்டித்துவருகின்றார்கள்.

அம்மட்டோ, நம்மவர்களும் அயலூர்களில் போயிருப்பவர்களும் இவ்விரதினத்தில் ஜன்மஸ்தலத்திற்கு வந்துசேரும் வழக்கமிருத்தலால், இது நம்மவர்களுக்கு மிகப்பரயார்த்தமென்பது நிச்சயமாகின்றது.

இவ்விரதானுட்டானம் நமது சமூகத்தார் சர்வயோக க்ஷேமங்களுக்கும் காரணமாய் நம்மதென்று சிறப்புரிமை பாராட்டவேண்டிய முக்கியகைங்கரியமென்பது சித்தமாதலால், விடாது கைப்பிடித்து வருகிற முக்கியமாகிய இச்சட்டிதினம் ஒன்றிலேனும், அதற்குரிய சதாசாரியமானுட்டான தற்பரர்களாயிருந்து விநாயகரைப்பூஜித்து நமது விநாயகர் கோயில்களிலும் நமது நகரவகுப்புக் கோயிலில் விநாயகர் ஸந்நிதியிலும் விநாயகரைப் பூஜிப்பித்து உத்ஸவஞ்செய்து தரிசித்து நிஜமாசாரத்துடன் இவ் விரதத்தை அநுட்டித்துக் குலதெய்வமும் சர்வாபீஷ்டவரதருமாகிய விநாயகக்கடவுளது திருவருளால் சர்வமங்களயோக க்ஷேமங்களையும் மேன்மேலும் அடைந்து இனிதுவாழும்படி ஞாபிக்கின்றோம்.

ஸ்ரீ கணேசபக்தர்.



காலென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்றென்
செயும்! குமரேச னிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி கார்த்திகை-௰௨ ௨௫-௨

## மலாய்நாட்டு பாஸ்போர்ட்டு நிபந்தனை.

இந்தியாவிலிருந்து மலாய்நாடு செல்லும் பிரயாணிகட்கு ௧௯௧௫-ஆம் வருஷத்தில் ஏற்பட்ட இந்த நிபந்தனையானது இன்னும் நீக்கப்படவில்லை. ஐரோப்பிய யுத்தம் நடக்கிறகாலத்தில் இந்த நிபந்தனையை இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி ஏற்படுத்தினார்கள். எதற்காகவென்றால், கப்பல் குறைவு ஏற்பட்டுவிட்டதென்று காரணங்கூறப்பட்டது. இந்த நிபந்தனையால் ஜனங்கள் படுங்கஷ்டமும் பணச்செலவும் கொஞ்சமல்ல. ஆனால், ஏதாவது கவர்ன்மெண்டாருக்கு அதிக வரும்படி கிடைக்கிறதோ வென்றால், அதுவுமில்லை. ஜனங்கள் இந்த நிபந்தனையால் அதிக கஷ்டநஷ்டமடைகிறார்களென்பதைக் கவர்ன்மெண்டார் அறியாமலிருக்கவும் நியாயமில்லை. ஆனால் இந்தச் சட்டம் மாற்றப்படவில்லை. இந்த நிபந்தனை நீக்கப்படவேண்டுமென்று, சென்னை கவர்ன்மெண்டாருக்கும் இந்தியா கவர்ன்மெண்டாருக்கும், கான்பரன்ஸுகளிலும் பல பொதுக் கூட்டங்களிலும் தீர்மானித்து அனுப்பியிருக்கிறார்கள். சட்டசபைகளில் ராவ்பகதூர் ஸ்ரீமான் அண்ணாமலை செட்டியார், கனம் ஸ்ரீமான் முத்தையா செட்டியார், கனம் அகம்மது தம்பி மரைக்காயர் முதலியோர் பலமுறை கேட்டிருக்கிறார்கள். அத்தனையும் விழலுக்கிறைத்த நீராகிவிட்டன. கடைசியாகச் சென்ற நவம்பர் மாதத்தில் கூடிய சட்டசபையில் இதைப்பற்றி கனம் அகமது தம்பி மரைக்காயர் கேட்ட கேள்வியையொட்டி கவர்ன்மெண்டு தரப்பில் கனம் நாப் பேசிய போது அடியில் வருமாறு கூறியிருக்கிறார்:—

"இது இந்தியா கவர்ன்மெண்டார் முடிவு செய்யக்கூடிய விஷயமல்ல. பிரயாணச் சீட்டுகள் பெற வேண்டிய அவசியம் எங்களுடைய உத்தரவினால் ஏற்படவில்லை. பிரயாணச்சீட்டு இல்லாமல் ஒருவரும் தங்களுடைய நாட்டில் வந்திறங்கக் கூடாதென்று ஸ்ட்ரெயிட்ஸ் செட்டில்மெண்டு கவர்ன்மெண்டு உத்தரவு செய்திருப்பதனாலேயே அதைப் பெறவேண்டிய அவசியமேற்பட்டிருக்கிறது. ஆகவே இந்த நிர்ப்பந்தங்களை அகற்றுவது ஸ்ட்ரெயிட்ஸ் ஸெட்டில்மெண்டு கவர்ன்மெண்டைப் பொறுத்த விஷயம். பிரயாணிகள் அந்தநாடுகளில்போயிறங்குவதற்குப்பிரயாணச் சீட்டுகள் வேண்டியிருக்கையில் தேசப் பாதுகாப்புச் சட்டத்தின்படி ஏற்படுத்தப்பட்டிருக்கும் அந்த முறையை அகற்றுவதனால் என்ன பிரயோஜனம்? பிரயாணச் சீட்டு இல்லாமற்போயித் திருப்பியடிக்கப்படாமல் தேசப் பாதுகாப்புச்சட்டத்தின்படிஏற்படுத்தப்பட்டிருக்கும் விதி பிரயாணிகளைக் காப்பாற்றுகிறது"

இதனால் இந்தப்பாஸ்போர்ட் நிபந்தனை, இந்தியா கவர்ன்மெண்டைப் பொறுத்தமட்டில் தேவையில்லையென்று தெளிவாகத் தெரிகிறது. இந்தியப் பிரயாணிகள் போனால், மலாய்க் கவர்ன்மெண்டார் இறங்க விடுவதன் பொருட்டாக இந்தியர்களின் நன்மையை உத்தேசித்து இந்தச்சட்டம் இந்தியாவில் அநுஷ்டிக்கப்படுகிறதென்று சொல்லப்படுகிறது. நிற்க;

சென்ற இரண்டு மூன்று வாரங்களாக மலாய் நாட்டிலிருந்து வந்தவர்கட்கு அந்நிபந்தனையில்லையென்று தெளிவாகத் தெரிகிறது. ஆனால் யாருடையநிபந்தனைக்காக இச்சட்டம் ஏற்பட்டதோ, அவர்கள் நீக்கியபின்னரும் இந்தியா கவர்ன்மெண்டார் விட்டு விட்டார்களா? இல்லை. நமது ஜனங்களில் மலாய்நாடு செல்லவேண்டியபலர், மலாய் நாட்டிலிருந்து வந்தவர்களுக்கு அந்நிபந்தனை இல்லாதபடியால் நமக்கும் பாஸ்போர்ட் தேவையில்லையென்று நினைத்து அதற்கு முயற்சி செய்யவில்லை யென்றும் அறிகிறோம். கவர்ன்மெண்டு தரப்பில் கனம் மெம்பர் கூறியபடி இரண்டு தேசத்திலும் பாஸ்போர்ட் நிபந்தனையை ஏற்படுத்தக் காரணராயிருந்தவர்கள் மலாய் கவர்ன்மெண்டார்தானென்று தெரிகிறது. சென்ற வாரத்தில் நாம் கொடுத்துக் கேட்ட தந்திக்குப் பதில் "பாஸ்போர்ட் நிபந்தனை அவசியம்; ஆனால் அதனை நீக்குவதான விஷயம் யோசனையிலிருக்கிறது" என்று பதில் கிடைத்திருக்கிறது. காரணராயிருந்த மலாய் கவர்ன்மெண்டார் நிபந்தனையை எப்பொழுது நீக்கிவிட்டார்களோ அந்த நேரத்திலேயே அல்லது அதற்குச் சற்று முன்பாகவே இந்தியாவிலும் அந்நிபந்தனை யெடுக்கப்பட்டிருத்தல் வேண்டும். இல்லையானால் நமது ஜனங்களின் நன்மையின் பொருட்டு ஏற்படுத்தி மலாய் கவர்ன்மெண்டாரின் நிபந்தனையை யேற்றுக்கொண்ட இந்தியா கவர்ன்மெண்டார் வேண்டியன செய்து நிபந்தனையை நீக்கியிருத்தல் வேண்டும். அப்படியுமின்றி "யோசனையில்" இருக்கவேண்டிய அவசியமென்னவென்று நமக்கு விளங்கவில்லை. நிபந்தனை வேண்டுமென்று கூறிய மலாய் கவர்ன்மெண்டார் வேண்டாமென்கிறார்கள். தங்கள் தேவைக்கல்லவென்று சொன்ன இந்தியா கவர்ன்மெண்டார் ஏன் யோசிக்கவேண்டும்? இப்போது மலாய் நாடிருக்கும் நெருக்கடியான நிலைமையில் பிரயாணிகளுக்குப் பலவகையான கஷ்டநஷ்டங்களையும் கவர்ன்மெண்டாருக்கிருக்கும் வேலைத் தொந்தரவையும் இன்னும் காலதாமதப்படுத்தி நீட்டிக்கொண்டு போகாமல் இந்த நிபந்தனையை உடனே நீக்கிவிடுவார்களென்று எதிர்பார்க்கிறோம்.



## எண்டிசைக்காட்சி.

### இந்த நிலைமையிலும் இப்படித் தோன்றுமா?

ஜயபுரி மஹாராஜா தமக்குச் சேரவேண்டிய ரூபாய் ௧௨ லக்ஷத்தையும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரே எடுத்துக் கொள்ளலாமென்று கொடுத்து விட்டாராம். இந்தியர், பொருளாதாரத்திலும் தொழிலிலும் ஆட்சியிலும், தாழ்ந்திருப்பதை அறிந்தும் அநுபவித்தும் ஒரு இந்திய மன்னர் பெருந்தலைப்பத்தால் கிடைத்த பணத்தைத் தன்தேசத்துக்கு உதவாமலிருந்தது வெறுக்கத்தக்கதே. இந்த நெருக்கடியான நிலைமையிலும் ஒரு இந்திய மன்னரின் மனது இந்திய மனதாக இல்லாமல், எவற்றிலும் பிந்திய மனதாக இருக்கக் காரணத்தைக் கடவுள்தான் அறிவர்; காரணமில்லாவிடின் இவருக்கு இப்படித்தோன்றுமா?

### இதுவன்றோ முன்னேற இசைந்தமுறை.

ஜர்மனியில் வீடு வாசல்கள் இல்லாமல் பலர் கஷ்டப்படுவதால், ௨௪ வயதுக்குக்கீழ்ப்பட்டவர் விவாஹம் செய்து கொள்ளப் படாதென்றும், வீடுவாசல்கள் இருப்பதாக நிரூபித்தாலன்றி விவாஹத்துக்கு அநுமதி கொடுக்கப்படமாட்டாதென்றும் உத்தரவு பிறப்பித்திருக்கின்றார்கள். இதுவன்றே தேசம் முன்னேறவேண்டியவழியில் தேசமக்களைச் செலுத்தும்வழி. பொருள் சம்பாதிப்பதற்கும்புகழ்சம்பாதிப்பதற்கும், கல்வியறிவைச் செலுத்துவதற்கும் கடமையுணர்ச்சியைச்செலுத்துவதற்கும், தலை தாழ்ந்தியடிமையாவதற்கும் தலை நிமிர்ந்து சுதந்தரனுவதற்கும் வழியறியாத சிறர்களையும் பேதைகளையும்கிருஹஸ்த நிலையில் புகுத்தியதாலேயே இந்தியா இத்தாழ்ந்த நிலையிலும் வீரமும் தீரமும் இல்லாத ஜனப்பெருக்கிலும் ஏறிக் கொண்டே வருகின்றது. இவற்றைக் கெடுத்து ஆடவன் தன்னையும் தேசத்தையும் உலகத்தையும் அறிந்தபின்னரே இல்வாழ்க்கையில் இறங்குவது இசைந்தமுறை.

### எல்லாரும் வீரரா?

ஒத்துழையாமையை யநுசரித்துத்தம் ஜமேதார் பட்டத்தையும் தமக்குவர இருக்கும் தங்கப் பதக்கங்களையும் அன்னிய கவுரவங்களையும் வேண்டாமென்று வெறுத்துதறிய ஸ்ரீ பிரேம சந்திரபாரீனாராகிய இராணுவ அதிகாரியே வெற்றி பெற்ற வீரராவர். ஆயுதத்தாலும் அதிகாரத்தாலும் வெல்லுவது வெற்றியன்று. அபிமானங்கொண்டு உரிய விஷயத்தில் தன்னையும் தன்சுகத்தையும் தன் பொருளையும் தன் கவுரவங்களையும் த்யாகம் செய்வதே வீரமாதும்; இவரைக் கண்டும் கேட்டும் வெட்கம் அடைய மாட்டார்களோ வேறுள்ள இந்திய அபேட்சகர்கள்?

### இது யாருடைய பணம்? இந்தியர் பணமன்றோ?

ஐரோப்பிய உத்தியோகஸ்தர் வசிக்க கல்கத்தாவில் அலெக்ஸாண்டிரியாவுக்கு அருகில் உள்ள பாரா பேஸாரில் கட்டிடங்களைக் கட்டிக்கொடுக்கப் போவதாக வங்காள ராஜாங்கத்தார் தீர்மானித்திருக்கிறார்களாம்; இந்தியர் வரிப்பணம் இந்திய ஏழைகட்கு உதவப் பெறாமல் இப்படிச் செலவாகலாமோ? இது ராஜாங்கமுறைபோலும். இந்திய ஏழைகள் தெருவில் அலையவேண்டுமாம்; இந்தியப் பொதுமக்கள் ஏங்கியிருக்கவேண்டுமாம்; இந்திய உத்யோகஸ்தர் தமது வரும்படியில் வாடகை வீட்டில் இருக்கவேண்டுமாம்; வந்திறங்கித் தொந்தி நிரப்பும் தந்திரம் மிகுந்த இந்த ஐரோப்பியர் ஏழைகள் பணமே வீடாக. இருந்துகுடியைப்பெருக்கவாம்; என்னே! இந்த அரசியல்; என்னே!! நந்தம்துறை செயல்.

### ஏன் வந்தார்?

ஸ்ரீமாந் எல். கே. துளசிராம் அவர்கள் உபந்யாசம் செய்தார்கள். சுதேசியத்தைப்பற்றி விசேஷமாகப் பேசி இப்பொழுது கிடைத்திருக்கிற சீர்திருத்தம் "தெருப்புழுதியைப் போன்றது கொஞ்சமும் உபயோகமற்றது" என்று வெகு கம்பீரமாகக்கூறினர். பின்னர் "அப்படியிருந்தாலும் நான் அதைத் தான் உபயோகப்படுத்தி உங்கட்கு நன்மைசெய்ய நினைக்கிறேன்" என்று பேசினர். வெட்கம்! இந்தியா சட்டசபைக்கு நிற்குமிவர் ஏன் பேசவேண்டும்? ஒன்று, சீர்திருத்தம்நன்மையென்று சொல்லலாம். இல்லாவிட்டால்வெறுமேயிருக்கலாம். மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் ஏன் கஷ்டப்படவேண்டுமோ; பாவம்! அந்தப் புழுதியையேன் இவர் தழுவுகின்றார்? மற்ற அபேக்ஷகர்களைப்போல் இவரும் இராமல் ஏன் உபந்யசிக்கவந்தார்?

### எண்ணெய்ச் செலவுதான்.

ஸ்ரீமான் எல். கே. துளசிராம் அவர்கள் படாதபாடெல்லாம் பட்டார்கள். ஏஜண்டுகளை விட்டு என்ன வேட்டையாடியும் தோல்வியடைந்து விட்டார் என்று தகவல் எட்டுகிறது. அது உண்மையானால் எண்ணெய்ச் செலவேயன்றிப் பிள்ளை பிழைக்கவில்லை. இனிமேல் ஒத்துழையாமையைக் கைக்கொள்வரோ?

## தந்திச் செய்தி.

பினங்கு கார்த்திகை ௨௰௨

மதராஸ் உண்டியல் விலை நூற்று அறுபது.

ஈயம் விலை நூற்றுப் பதினான்கு ரப்பர் விலை முப்பத்து மூன்று..

இரங்கூன் கார்த்திகை ௨௰௨

பினங்கு உண்டியல் விலை நூற்று அறுபத்தாறு.

நெல் விலை நூற்று நாற்பத்தைந்து.

அடுத்த வருஷம் ஆரம்பமுதல் (௧௯௨௭) இந்திய அரிசி ஏற்றுமதி நிபந்தனை எடுக்கப்பட்டிருக்கிறது.

சர்வகலாசாலையின் ஆதரவில் உள்ள பள்ளிக்கூடத்தில் படித்து வரும் அ00 மாணவர்களில் ௯0 பேர்தான் பள்ளிக்குச் செல்கின்றனர். கலாசாலைத் திறப்புவிழாவை நடத்த லெப்டினண்ட் கவர்னர் வரவிருந்ததால்தான் வேலை நிறுத்தம் உண்டாகியிருக்கிறது. சர்வகலாசாலையை பஹிஷ்காரம் செய்ய வேண்டுமென்று மாணவர்கள் கூறுகின்றனர்.

ராவ்பகதூர் ஸ்ரீமாந் மு. அ. அண்ணாமலை செட்டியாரவர்கட்கு இராஜாங்கசபைக்கு முதலாவதாக அ௭௯ வோட்கள் கிடைத்திருக்கிறபடியால் அவர்களே முதலாவதாகத் தெரிந்தெடுக்கப் பெற்றிருக்கிறார்கள்.

இந்தியச் சட்டசபைக்கு சிவகங்கை வக்கீல் ஸ்ரீமாந் முகுந்தராஜய்யங்கார் அவர்கட்கே அதிக வோட் கிடைத்திருக்கிறது.

சென்னைச் சட்டசபைக்கு ராமநாதபுரம் ஜில்லா ஸ்தானம் ஒன்றுக்கு மதுரை ஸ்ரீமாந் டீ. சி. சீனிவாசய்யங்காரவர்கட்கு ௯௯௯௯ வோட்டுக்கள் கிடைத்திருக்கிறபடியால் அவர்களே ஸ்தானம் பெறுவர்.

## இவை பிரசுரிக்கப்படமாட்டா

௧. தருமம் (சரியான கையொப்பமில்லை.) ௨. தேவகோட்டை இந்து மஹாவிருத்திசங்கம் (அவ்வளவு இடங்கொடுக்கமுடியவில்லை.) ௩. தண்டமிழ்த் தொண்டன் (சிலர்க்கு மனவருத்தத்தையுண்டாக்கலாம்.) ௪. நாட்டுக்கோட்டையார் ஜாதீயத்திருத்தம் (பலமுறை வெளிவந்திருக்கிறது.) ௫. காரைக்குடி போஸ்டாபீஸ் அசௌகர்யங்கள் (சரியான கையொப்பமில்லை.)

ப-ர்.

## உள்ளூர் வர்த்தமானம்.

௨௰௳ மாலையில் கொப்புடையம்மன் கோயிலுக்கருகில்மதுரையிலிருந்துவந்த ஸ்ரீமாந் மந்திரேச்வரசர்மா அவர்களும் ஸ்ரீமாந் கு. கிருஷ்ணய்யர் அவர்களும் ஸ்ரீமாந் அ. ச. ராமய்யரவர்களும் மகாத்மா காந்தியடிகளின் அபிப்பிராயத்தை உபந்யசித்தார்கள். ஜனங்கள் உருக்கமாகவும் பக்தியோடும் கேட்டுக்கொண்டிருந்தனர். அப்படியே ௨௧௳ மாலையிலும் உபந்யசித்தனர். ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தனர்.

---

௨௧௳ காலைமுதல் மாலைவரை இந்தியச் சட்டசபைக்கு யூனியனாபீஸிலும், சென்னைச் சட்டசபைக்கு ஹைஸ்கூல், பெண்பாடசாலை, ஹாஸ்பிடல், சப்ரிஜிஸ்டராபீஸ் முதலிய ஸ்தானங்களிலும் வோட் எடுக்கப்பெற்றது.

இந்தியச்சட்டசபை
வோட்டர்கள் தொகை ௨௪௯
சென்னைச்சட்டசபை
வோட்டர்கள்தொகை ௫௩௨
சென்றவர்களின் தொகை
இந்திய சட்டசபைக்கு ௩௨௰
சென்னைச் சட்டசபைக்கு ௨௬௯

ஹைஸ்கூலை போலிங் ஸ்டேஷனாக ஏற்படுத்திவிட்டபடியால் ஸ்கூல் லீவு விடப்பட்டது.

---

௨௨௳ மாலையில் மதுரை ஸ்ரீமாந் ஜே. என். ராமநாதன் அவர்கள் "சுயராஜ்யம்" என்பதைப்பற்றி வியாஜம் வைத்துக்கொண்டு தேசாபிமானிகளையும் மற்றவர்களையும் வாய்குளிர வைதுதீர்த்தார்.

---

௨௨௳ இரவு ௭-மணிக்கு மகாத்மா காந்தியடிகளின் திருவுருவப்படத்தையும் ஸ்ரீ லாலாவின் திருவுருவப்படத்தையும் வண்டியில் வைத்துப்பலர் இழுத்துக்கொப்புடையம்மன்கோவிலைச்சுற்றி ஊர்வலமாகக்கொண்டு வந்தார்கள். அம்மன்சந்நிதிக்கு முன்வரும்போது சுமார் ௩௱-ஜனங்கள் கூடியிருந்தனர். நெருக்கம் ஜனங்கள் கடந்துசெல்லமுடியாத நிலையிலிருந்தது. கடைக்காரர்கள் தேங்காய் பழம் கற்கண்டு சர்க்கரை முதலியன வைத்து வணங்கினர். ச. பீ. க. மீ. புடவைக்கடையின்முன்னர் ஐந்து நிமிஷம் வண்டி நிறுத்தப்பட்டது. உபந்யாசகர்மூவருக்கும்மாலைகள்போடப்பெற்றன. "பாத்தியா" ஓதப்பெற்றது. மகம்மதியர்பலர் அங்குகுழுமியிருந்தனர். பின்னர் ஊர்வலம் மேலவீதியிலிருக்கும் வேதபாடசாலையில் வந்து நின்றது. ஸ்ரீமாந்மந்திரேச்வரசர்மா அவர்கள் மகாத்மாவின் சரித்திரத்தை மிகஉருக்கமாகவும் சுருக்கமாகவும் அரைமணிநேரம் உபந்யசித்தனர். மற்ற உபந்யாசகர்களும் பேசினர். ஸ்ரீமாந் ராமபத்ரசர்மா அவர்களும் ஸ்ரீமாந் பசலா கிருஷ்ணய்யரவர்களும் வந்தனோபசாரங்கூறினர்.

---

௨௩௳ மாலையிலஸ்ரீமாந் ஜே. என். ராமநாதன் உபந்யசிக்க ஆரம்பித்தார். இடையிடையே பலர் கூச்சல் போட்டனர். பல பிராமணர்கள் இடை இடையே சில சில கேள்விகளைக்கேட்டனர். ஆகையால் உபந்யாசம் அமைதியுடன் நடைபெறவில்லை. [illegible] த்தது. ஒன்றும்பேசஇயலவில்லை. [illegible] விட்டது.

## பொது வர்த்தமானம்.

டிசம்பர்மாதம்௨௬-௳ ஞாயிற்றுக்கிழமையன்று நாகபுரிகாங்கிரஸ்கூட்டப்பெறும்.

***

சென்னை ஹைகோர்ட் நீதிபதியான ஸர் அப்துல் ரஹீம் புதிய அரசாங்க நிர்வாக அங்கத்தினராக நியமிக்கப் பெற்றிருக்கிறார்.

***

ஸ்வாமிவிவேகாநந்தரின்ஸஹோதரரான பூபேந்த்ரநாததத்தர், ராஜஷாஹிச்சிறைச்சாலையினின்றும் விடுவிக்கப் பட்டார்; இவர் ஒரு ராஜீயச்சிறையாளர்.

***

ஜப்பானில் செய்யப்பெறும் க்ஷவரப் பிரஷுகளும் வர்ணம் பூசும் பிரஷுகளும் இந்தியாவிற்குள் இறக்குமதி செய்யக்கூடாதெனக் கடற்சுங்கவரிச்சட்டப்படித்தடுக்கப்பட்டிருக்கின்றன.

***

சென்னைச் சட்டச்சபைக்கு மதுரை ஸ்ரீமாந் முத்துச் செட்டியாரவர்களுக்கு இராமநாதபுரம்ஜில்லாவின் பிரதிநிதிஸ்தானத்திற்கு அதிகமான வோட் கிடைத்திருக்கிறதாம்.

***

சேலம்ஜில்லாவிலுள்ள தும்பல் என்ற கிராமத்தில்சுமார்௭௰ஓட்டர்களிருந்தும் ஒருவராவது ஓட்செய்யாதபடியால் வெறும் பெட்டியே கலெக்டருக்கு அனுப்பப்பட்டது.

***

மெஸர்ஸ்ஹாண்ட்லீபேஜ் கம்பெனியார், ஆகாயக்கப்பல்மூலம், பம்பாயிலிருந்து கல்கத்தா மார்க்கமாக இரங்கூன் வரை ஒரு மெயில் ஸர்விஸ் நடத்துவதாக ஆலோசித்திருக்கிறார்களாம். பம்பாயில் மாலை ௬-மணிக்குப் புறப்பட்டுக் கல்கத்தாவில் காலை ௬-மணிக்குச் சேர்ந்து, பிறகு அங்கிருந்து புறப்பட்டு மாலை ௬ மணிக்கு இரங்கூன் சேருமாம்.

---

சென்றவாரத்திலிருந்து திருடர்கள்வீடுகளில் நுழைந்து விளையாடஆரம்பித் திருக்கின்றனர். பக்கத்துச்சுவர்கள் பெரும்பாலாக இடிந்துகிடப்பது அவர்கட்குச்சாதகமாகவிருக்கிறது.

---

நேற்றுமாலையில் கல்லுக்கட்டிடாதக் கொட்டகைக்கு அருகில் மதுரை ஸ்ரீமான் ஜே. என். ராமநாதன் அவர்களும், பஞ்சாங்கக்காரர் வீட்டின்முன்பாக ஸ்ரீ ராமசாமி ஐய்யரவர்களின் அக்ராசனத்தில் ஸ்ரீ ராமபத்ரசர்மா அவர்களும், ஸ்ரீ எ. கே. சாமிநாதசாஸ்திரிகளும், ஸ்ரீ ராமகிருஷ்ணய்யரவர்களும் உபந்யசித்தனர். இருபிரிவாக இன்னும்பலநாள் உபந்யாசம் நடைபெறும் போலிருக்கிறது.

---

இரண்டுவாரங்களாகத்தபால்ஸ்டாம்புக்குப் பெரும்பஞ்சம் வந்திருக்கிறது. யார் போய் எத்தனைமுறை கேட்டாலும் போஸ்ட்மாஸ்டர் சலிக்காது. இல்லையென்று சொல்லி வருகிறாரென்றறிந்து சந்தோஷிக்கிறோம். இவ்வூர் ஆபீஸ்மிகப்பெரிதாகப்போய்விட்டது. அதற்குத்தக்கபடிஸ்டாம்புஅதிகமாக வேண்டுமென்றறிந்து அதிகமாகவும் காலதாமத மின்றியும் வரவழைத்து வைத்துக்கொள்ளும் சாமார்த்தியம் இனிமேலாவது வந்துவிடுமானால் சாதுக்களாகிய ஊர் ஜனங்களுக்குள்ஸ்டாம்புப்பஞ்சம் நிவர்த்தியாகலாம்.

## கடைத்தெரு

### பினாங்கு.

தபாலாபீஸில் அனுப் புவரானல் ௧௩௫-ரூபாய்க்கு ௱-வெள்ளியாக இருக்கிறது.

### இரங்கூன்

கார்த்திகை ௧௧௳

| | |
|---|---|
| பாங்கி ௩ மூ தவணைவட்டி | ௰ |
| டிமாண்டுக்கு வட்டி | ௬ அ ௦ |
| மலாய்நாட்டு உண்டியல் விலை | ௱௫௰௫ |
| மேற்படி பணம் வரவழைக்க | ௱௫௰ |
| பழைய நெல் விலை | ௱௪௰ |
| புதுநெல் அறுவடை ஆரம்பமாகிறது. | |
| சின்னமில் அரிசி விலை | ௪௦௦ |
| பெரியமில் அரிசி விலை | ௩௭௦ |

### சென்னை.

| | |
|---|---|
| பவுன்விலை | பதினேழரை. |
| வெள்ளி விலை | நூற்றுப்பதினெட்டு |
| சீமைவிலை ஒரு ரூபாய்க்குப் | பதினேழு பென்ஸ். |

### மதுரை.

| | | | |
|---|---|---|---|
| ௬௪ நூல் விலை. | ௧௨ | ௬ | ௦ |
| ௨௮௫ | ௬ | ௦ | ௦ |
| ௨௩ | அ | ௧ | ௦ |
| ௨௪ | ௧௫ | ௧௨ | ௦ |
| ௨௨௫ | ௧௫ | ௩ | ௦ |
| ௧௨௫ | ௧௫ | ௩ | ௦ |
| உள்ளூர் நூல் நிமிளி | ௧௭ | ௪ | ௦ |
| பருக்கா | ௧௭ | ௧௨ | ௦ |
| கறுப் | அ | ௧ | ௩ |

### உள்ளூர்.

| | | | |
|---|---|---|---|
| மதராஸ்உண்டியலுக்குவட்டம் | ௦ | அ | ௦ |
| இரங்கூன் ௸ | ௨ | ௦ | ௦ |
| அந்நிய நாடுகளிலிருந்து வரும் போஸ்டல் ஆர்டருக்கு | | | |
| ஷில்லிங் ௧-க்கு | ரூ. ௦ | அ | ௦ |
| ௸ பவுன் ௧-க்கு | ரூ. ௧௦ | ௦ | ௦ |

## போஸ்டாபீசும் எருமைமாடும்.

காரைக்குடி போஸ்ட் மாஸ்டரவர்கள் மேற்படி ஆபீஸின் பின்புறத்தில் குடியிருக்கிறார்கள். அங்கே அவர்களுடைய சௌகர்யத்திற்காகவோ அல்லது பிறருடைய சௌகர்யத்திற்காகவோ ஒரு எருமைமாடு வளர்க்கிறார்கள். அந்த மாடானது போஸ்டாபீஸின் மேலதிகாரியின் சிபார்சு பெற்றிருக்கிறபடியால், ஆசாரவாசல் வழியாகத்தான் போய் வந்து கொண்டிருக்கின்றது. அந்த மாடு தபாலாபீஸின் வழியாகப் போய்வருவதாலும் அங்குள்ள சாமானில் வாய்வைப்பதாலும் எனக்கொன்றுமில்லை யென்றாலும் ஆள் மேலே உரசுகிறபோதுதான் என்னையும் மற்றவரையும் பாதிக்கிறது. அதுசீக்கிரமாக வெளியே போகக்கூடிய மிருகமும் மல்ல. இதைத் தவிர மழைவிடாது பெய்தபொழுது ஆபீஸ் முகப்பில் அந்த மாடு கட்டப்பட்டிருந்ததாக அடையாளங்கள் இருந்தன. போஸ்ட் மாஸ்டர் எந்த ஊரிலும் இருப்பது சகஜந்தான். ஆனால், ஆபீஸுக்குள் எருமைமாட்டை விட்டு ஓட்டுவது காரைக்குடி ஆபீஸில் தான் புதிய காட்சியாயிருக்கிறது. எருமைமாட்டை ஓட்டி ஆபீஸுக்கு வந்திருக்கும் ஆட்களை உரசிவிடுவதற்குபோஸ்டல் கைடில் எத்தனையாவது விதியிலிருக்கிறதென்பதை போஸ்ட்மாஸ்டராவது அல்லது சில சமயங்களில் பழுதையெடுத்து எருமையின் பின் செல்லுகின்ற போஸ்ட் பியூன்களாவது தெரிவிப்பார்களோ.

முத்துவேலுப்பிள்ளை.



## வியாபாரப் பகுதி

"சிறுமுயற்சி செய்தாங்
கறுபயன் கொள்ளப்
பெறுமெனிற் றாழ்வரோ தாழார்."

### மரத்தூள் அல்லது ரம்பத்தூள்.

உலகிலுள்ள எந்தப்பொருளையும் அசட்டைசெய்தல்கூடாது. அது இயற்கைப் பொருளாயினும்சரி; செயற்கைப்பொருளாயினும் சரியே. ஒருவரால் அலட்சியம் செய்து எறியப்படுகிறபொருள் இன்னொருவருக்கு உபயோகப்படுகின்றது. இப்போது, மரம் அறுக்குங்காலத்தில் கீழே விழும் ரம்பத்தூளை யெடுத்து விசாரிப்போம். இதனை நாம் ஒரு பொருளாகக் கருதாமல், விழுந்த இடத்திலேயே மண்ணோடுமண்ணாய்ப்போகும்படிவிட்டு விடுகின்றோம். ஆனால் இப்பொருளை இதர தேசத்தார் பலவகைகளிற் பயன்படுத்திக் கொள்கின்றனர். நம்மவரும், சிற்சில சமயங்களில் எருமுட்டை (வறட்டி)க்காகப்பயன் படுத்துகிறார்கள்; எனினும், அது ஒரு பெரிய பிரயோஜனமாகாது; அயல்நாட்டார் எவ்வெவ்விதத்தில் இதனைக்கொண்டு வியாபாரம்செய்கின்றனர் என்றுபார்ப்போம். இதனைச் சிறியகாரியங்களிலும் பெரியகாரியங்களிலும் உபயோகப்படுத்துகின்றனர். கணப்புச்சட்டிக்கும் விளையாட்டுப் பொம்மைகள் (பிரதிமைகள்) செய்வதற்கும் தலையணைகளில் அடைத்துக்கொள்வதற்கும் வண்டி மெத்தைகட்கும் உபயோகப்படுத்தி கொள்ளப்படுகின்றது. இவை சிறியகாரியங்கள். இனிப்பெருங்காரியங்களாவன:—

ஜர்மனியர் இத்தூள்களைச் சிறு சிறுகற்களாகச்செய்து கட்டிடஅஸ்திவாரங்கட்கு உபயோகின்றனர். இதனோடு தள்ளுண்டலோகப்பொருள்களையும் சேர்த்துச் செங்கல்களாகவும் செய்கின்றனர். இச்செங்கல்கள் இலேசாகவும் ஈரம்பற்றுமலுமிருக்கின்றன. தீக்கு அஞ்சாமலும் இருக்கின்றன. இன்னும் இவற்றைப்பலகைகளாகவும் செய்து வீட்டுமேற்கூரையாகவும் உபயோகிக்கின்றனர். வேறு சில ரஸாயனப்பொருள்களுடன் சேர்த்துத்தளம் போடுவதில் உபயோகிக்கின்றனர்; அடித்தளம் சலவைக்கல்லிட்டது போல் உறுதியும் வழவழப்பும் உடையதாக இருக்கின்றது; இதில் நீர்சுவறாது; தீப்பற்றாது; வெடிப்புக் காண்பதில்லை; சீக்கிரம் கற்போலிறுகிவிடுகின்றது. இன்னும் இதிலிருந்து ஒருவிதச்சாராயமும் இறக்குகின்றார்கள். ஜர்மன் ரஸாயன சாஸ்திரிகள் இதிலிருந்து சர்க்கரையும் செய்கின்றார்கள். இதினின்றும் ஒருவகை நேர்த்தியான பூட்டும் ஒருவகைக் காகிதமும் கோந்தும் (பிசின்) குதிரை பிஸ்கோத்தும் செய்கின்றனர்.

கானடா தேசத்தார் இதிலிருந்து ஒருவகை வாயு உற்பத்தியாக்கி விளக்கு வெளிச்சத்திற்குப் பதிலாக உபயோகிக்கின்றனர். வெளிச்சமும் இருக்கின்றது; செலவும் மட்டாயிருக்கின்றது. பிரான்ஸ் தேசத்தார், சாராயத்தின் துர்க்கந்தத்தை இதனைக்கொண்டு வடிகட்டினதனால், போக்கிவிடுகின்றனர்.

இதர ஸாதாரண உபயோகங்கள்:— தூரதேசங்கட்கு அனுப்பப்பெறும் கனிவகை பழவகை பனிக்கட்டி மீன்முதலிய மாமிசவர்க்கங்கள் இவற்றை மூடிப் பொதிந்து கட்டியனுப்பலாம். தோதகத்தி மரத்தூள் மயிர்த்தோல்களைச் சுத்தம் செய்யும். கழிபட்ட தாரெண்ணெயுடன் சேர்த்து எரிப்பதற்கு உபயோகப்படும். சிலஇடங்களில் பனிக்கட்டிக்குப் பதிலாக இதனையே குளிர்ச்சியாக்கி உபயோகிக்கின்றனர். இத்தூள் வீழ்ந்த இடங்களில் செடி கொடிகள் நன்றாய் வளரக்காண்கிறோமாதலால், இது இளமரங்கட்கு எருவாகவும் உபயோகப்படும். கள்ளிக்கோட்டையில் இதனை மலத்துடன் சேர்த்து எரித்து எருவாக்குகின்றார்கள். கலங்கினநீரை வடிகட்டிக்கொள்ள இதனை எரித்து உபயோகப்படுத்துகின்றனர். இதனைக் கார்ப்பாலிக் ஆஸிட் (Carbolic acid) உடன் சேர்த்து உலர்த்தி மெல்லிய துணியிற் சுற்றிப் புண்களில் கட்டினால், ஈரத்தை இழுத்துச் சீழ் முதலிய உண்டாகாமல் செய்து விடுகின்றது. இதனை வீணாக்காமல் மேற்சொன்ன உபயோகங்களைச் செய்தும் செய்துகொள்ளும்படியும் செய்யலாம்.

இப்படி இந்தியாவில் உபயோகமற்றவையென்று தள்ளியெறியப் பெறும் பொருள்களையும் சேகரித்துத் தொழிலும் வியாபாரமும் செய்யக்கூடிய வியாபாரக் கல்வியைத் தேசியக் கலாசாலைகளிலோ தனித்தனி இடங்களிலோ கற்றுக்கொடுக்கும் விஷயத்தை நம் தலைவர்களும் தேசாபிமானிகளும் தனிகர்களும் கவனித்து நடத்த முன்வரவேண்டும். இதனால் அற்பதிரவியம் உடையவர்க்கும் திரவியம் இல்லாதவர்க்கும் நல்ல பிழைப்பு ஏற்படும். இவர்கள் இதர அடிமைத்தொழில்களில் புகமாட்டார்கள். இதர தேசங்கட்குக் கூலியாட்களாகப் போகத்துணியமாட்டார்கள்; இவர்களது வாழ்வும் ஸந்தோஷ வாழ்வாக இருக்கும்; இவர்களது ஸந்ததியாரும உண்மையாய் உழைத்துப் பொருள்ஸம்பாதிப்பவராவார். ஸத்யமும் தர்மமும் உழைப்பும் உறுதியும் உபகாரமும் ஊக்கமும் முனைத்து நிற்கும். நாடு பொருளாதாரத்தில் நலம் பெற்றோங்கி வளரும். பிற நாட்டார் நம் நாட்டுக்குப் பொருளையனுப்பிவிற்பனை செய்ய அஞ்சுவர்; பண்டைய பெருமை பண்புடன் வளரும்.

## இளைஞர் பகுதி.

### வீரவாழ்க்கை.

மனிதன் உலகத்திலே பிறந்து வளர்ந்து இல்லற வாழ்க்கையில் வாழ்ந்து வருவானானால், அவனுக்குப் பல கஷ்டங்களும் கவலைகளும் அளவின்றி முன்னே வந்து நிற்கின்றன. சோம்பேறியாகவாவது பயங்காளியாகவாவது வழவழத்தவனாகவாவது இருப்பானானால், அவன் உலகில் வாழமுடியாது. அவனது வாழ்க்கை உப்பில்லாமற் சமையல் செய்த மாதிரியாகச் சுவையற்றுசவசவ வென்றாகி விடுகிறது. வாழ்க்கையில்உயிர் இருக்கவேண்டும். செத்த பிரேதம்போல வாழ்வதிற் பிரயோஜனமேயில்லை. ரோஷம் வேண்டும்; தைரியம் வேண்டும்; உண்மை வேண்டும்; ஊக்கம் வேண்டும்; தியாகம் வேண்டும்; வீர வாழ்க்கை வாழவேண்டும். வீர வாழ்க்கை யென்றால் என்ன? கத்தியெடுத்து யுத்தம் புரிவதென்று மட்டும் கருதுதல்கூடாது. கத்தியெடுத்து யுத்தம் செய்வது வீரமன்று. எடுத்த கத்தியை எதிரி நிற்குமட்டும் அல்லது உயிரிருக்குமட்டும் கீழே தொங்கவிடாது உறுதி காட்டுவது தான் வீரமாகும். அப்படியே படிப்பில் வீரம்; தொழிலில் வீரம்; வியாபாரத்தில் வீரம்; பணம் சம்பாதிப்பதில் வீரம்; எல்லாவற்றிலும் வீரம் கலந்து தழையவேண்டும். உடம்பிலெப்படி உயிர் கலந்து நிற்கிறதோ அப்படி ஒவ்வொரு ஜீவனிடமும் வீரம் ததும்பி நிற்றல் வேண்டும். தொழில் செய்யும் ஒருவன் தொழிலில் எவ்வளவு கஷ்டமடைந்தாலும் பலமுறை தவறினாலும் அந்தத் தொழிலில் தேர்ச்சி பெறுமளவும் விடாது முயலவேண்டும். வியாபாரஞ் செய்பவன் அதில்வரும் லாப நஷ்டங்களைப்பொருட்படுத்தாமலும் விடாமலும் மேலும்மேலும்செய்து, பொருள் கிடைப்பதற்கும் வியாபாரம் அபிவிருத்தி யாவதற்கும் என்னென்ன வேண்டுமோ, அவற்றைக் கண்ணுங் கருத்துமாக இருந்து தைரியத்தோடும் ஊக்கத்தோடும் செய்துவருவதேவீரமாகும். பொது நன்மைக்கு உழைக்க முன்வரும் போது பலர்கூறும் பழிச்சொல்லுக்கும் அற்பத்தனமானசொல்லுக்கும் அர்த்தமற்ற சொற்களுக்கும் அஞ்சாமல், யாராவது உண்மையறியாமல் செய்யும் இடையூறுகளை லட்சியம் செய்யாமல், யாதவரினும் ஒதுங்கிப்புறங்காட்டிப்பதுங்காமல், கம்பீரமாக எதிர்த்து நிற்பதே வீரமாகும். இப்படியே ஒவ்வொன்றிலும் நியாயத்தைக் கைக்கொண்டு சரியான வழியில்எதிர்த்துக்கம்பீரமாகத்தலைநிமிர்ந்து மானத்தைப்பேணி வாழ்வதே வீரவாழ்க்கை; அதுவே இன்பவாழ்க்கை; அதுவே மோக்ஷ வாழ்க்கை.

## கல்விப் பகுதி

### ஆங்கில முறைக் கல்வி அனர்த்தம் விளைவிப்பது.

யாருக்கு? இந்தியமக்கட்கு; ஏன்? அது பரதேசிகளது ஆசாரத்தையும் பரதேசிகளது நாகரிகத்தையும் மாத்திரம் விருத்தி செய்துகொடுப்பதால்; அது மட்டுமோ? தேச ஆசாரங்களையும் தேச நாகரிகத்தையும் அழித்தும் விடுகின்றது; இப்படியார்சொன்னார்? படித்தறிந்த பெரியோர் எல்லோரும் சொல்கிறார்கள். இப்போது ஸர் ஜான் உட்ராப் (*Sir. Jhon Woodraffe*) என்னும் சிரியோரது அபிப்பிராயம் வருமாறு:—

ஸாதாரணக் கல்வியிலிருந்து கலாசாலைக் கல்வியை நாம் தனியாகப் பிரித்துவிடக்கூடாது. கலாசாலை மாணவர்களெல்லாரும் தங்கள் தங்களது வழக்கவொழுக்கங்களிலிருந்து மாறுபட்டிருக்கிறார்கள். தேசசம்பந்தமான-நீதிநெறி சம்பந்தமான-மனோவிருத்தி சம்பந்தமான முறைகளிலிருந்து விலகியிருக்கின்றார்களென்று சந்தேகமறச்சொல்லிவிடலாம். இதற்குப் பிரதானமானகாரணம் காணப்புகுந்தால், வழக்கம் மனோபாவம் உணர்ச்சி நீதிமுறை முதலிய வற்றினின்று முற்றும் மாறுபட்ட-அந்நியமான தன்மையுடைய ராஜாங்கத்தார், கல்விமுறையில் தலையிட்டுநடத்துவது என்ற ஒன்றுதான் தீர்மானத்துக்கு வந்துசேரும். உலக முழுதும் ஆராய்ந்துபார்த்தாலும், ஆங்கிலம் ஹிந்துதவிர வேறாக முற்றிலும் ஒவ்வாததன்மையையுடையஇரண்டுவகுப்பாரைக்காணுதல் அரிதாகும். இந்நிலையில், அந்தக்கல்விமுறையானது, இயற்கைக்கு விரோதமானதாகவும் தேச நன்மைக்கு முற்றும் கேடுவிளைவிப்பதாகவும் இருக்கின்றது. கல்வியில் செலுத்தும் இந்த ஆட்சிமுறையானது, சுயாபிமானத்தைக் கொண்ட ராஜீயநோக்கத்தாலே மாத்திரம் ஏவப்பட்டிருக்கலாமென்று நான் நினைக்கிறேன்.

எனது நண்பரும் கல்கத்தாவின் தொழிற்கல்விச்சாலையின் முன்னம் தலைவராக இருந்தவருமான ஸ்ரீ ஹாவேல் (*Mr. Havell*) என்பவர் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்:—

> ஆங்கிலக்கல்வி முறையானது, தேசமனோவிருத்தியை யிணக்கிக் கொடுப்பதற்கும் ஊக்கிக்கொடுப்பதற்கும் பதிலாக, அதற்கு மாறுபட்டதாகவும் அதனை அழிப்பதாகவும் இருக்கின்றது.

ஸர் ஜார்ஜ் பர்ட்வுட் (*SirGeorge Birdwood*) என்பவர் அம்முறையின் அனர்த்தத்தைப்பற்றி பின்வருமாறு சொல்கிறார்:—

> ஆங்கிலக் கல்விமுறையானது, இந்தியர்கள், தங்கள் சொந்தப் படிப்பு முறையில் வைத்திருந்த அன்பையும், ஒவ்வொருவரது ஆத்ம முன்னேற்றத்தையும், தங்கள் சொந்தத் தொழில்களில் வைத்திருந்த உள்ளக் கிளர்ச்சியையும் அழித்துவிட்டது; தங்கள் வழக்க வொழுக்கங்களையும் சுதேச மதாசாரங்களையும்பற்றிப் பொறுப்பற்றவர்களாக இருக்கும்படியாக்கிவிட்டது; தங்கள் சொந்த வீடுகளிலும் பெற்றோர்களிடத்தும் மனைவி யிடத்தும் வெறுப்பை யுண்டாக்கி விட்டது. தனது விஷமயமான அதிகாரத்தைச் செலுத்தி, ஒவ்வொரு இந்தியக் குடும்பத்திலும் அதிருப்தியைக் கொண்டு வந்திருக்கிறது.

சமீபத்தில், சென்னைச் சட்டப்படிப்பு மாணவர்கட்குப் புத்திமதி சொன்னபோது, ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் (*Sir Subramania Ayyar*) அவர்கள் சொன்ன சில ஸாரங்கள் எனது நினைவுக்கு வருகின்றன; அது பின்னே வருமாறு:—

> கல்விமுறையில் ஆங்கில ஆட்சியின் நோக்கமானது, இந்தியமக்களை மேல்நாட்டு முறையாக்க வேண்டுமென்பதேயாகும்; இது அதனது முடிவுமாகும்; இந்நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகவே, அதன்சொந்தமுறையில்முன்னேறி வந்து தனிமையான கிழக்குச் சந்ததியாக வளர்ந்துவரும் இந்திய இயற்கையையும் அதன் உண்மையான வாழ்வையும் நிர்மூலமாக்கும் உபாயத்தையே ஸ்வபாவமாகக் கொண்டிருக்கின்றது; அன்றியும், தற்காலஆட்சிமுறையானது இந்தியாவையே பாதி ஆங்கில இனமாக உருமாற்றிவ நினைந்திருப்பதாகக் காணப்படுகின்றது. அந்த முறையானது தகுதியற்ற செயலில் புகுத்திக்கேட்டைத் தருமென்று நான் சொல்லக்கூடும்.

ஆனால், எனது சொந்த அநுபவத்தில் கண்டுள்ளபடி, 'அந்த ஆங்கிலக் கல்வி முறையானது, சிறிது நன்மையையும் செய்திருக்கிறது என்றும் சொல்வேனாயினும், ஆத்திர ஆலோசித்துப் பார்க்கும்போது, 'இம்முறையானது கேடான விளைவைத்தான் உண்டு பண்ணியிருக்கின்றது' என்னும் யோசனையில் நானும் கலந்து கொள்கிறேன். இயற்கைக்கு மாறுபாடான ஒரு நிலையிலிருந்து இப்பயனைவிட வேறு எதைத்தான் எதிர்பார்க்கமுடியும்? தவறான கல்விமுறையானது, தேஹப்பிரயாசை மனவருத்தம் இவற்றையுண்டாக்கி ஸன்மார்க்க நிச்சயத்தை நிர்மூலமாக்கும், அது சிலரிடம் பலாத்கரித்துப் பொறுப்பின்மையை யுண்டாக்கியும், மற்றுஞ் சிலரிடம் அந்தக்கரண மாறுபாட்டையுண்டாக்கியும் ஸாதாரணமான— தாழ்ந்த —மேற்பகட்டான ஒழுக்கங்களைப் பற்றச்செய்து, பாசாங்கும் மனோநிச்சயமில்லாமல் சொன்னபடியாடும் தன்மையும் ஊழியத்தன்மையும் நிறைந்திருக்கும்படியாகவும் செய்துவிட்டது. மாணவரிடம் உண்டாக்கியிருக்கும் இத்தகைய கல்விச் செல்வாக்கானது, இனமுறையைப் பாழாக்கிப் புத்திவன்மையைப் போக்கி உருமாற்றத்தையே யுண்டாக்கிவிட்டிருக்கின்றது.

ஆகையினால், இந்தியமக்களின் படிப்பு முறையானது, தற்போது இருப்பது போல ராஜாங்க ஸம்பந்தத்தைக் கொஞ்சமேனும் பெறாமல், இந்திய மக்களாலேயே நடத்தப்பெறல் வேண்டும் என்று நான் விரும்புகிறேன்; ஆனால், ராஜாங்கமானது கல்வியதிகாரத்தைப் பெற்றிருக்க வேண்டுமாயினும், தற்போதைய கொள்கை மாற்றப்படவேண்டும்.

இந்திய மக்களின் இனத்தைவிளக்கும் தன்மையின் பெருமையும் உறுதியும் பலரும் நம்மால் உணரப்பெறல்வேண்டும். இவை உலகத்திலுள்ள மற்றதேசத்தினரால் அடையப்பெறாதனவாக இருக்கின்றன; தற்போது மேற்கத்திய கிழக்கத்திய நாகரிகங்களின் ஏற்றத் தாழ்வைச் சொல்லவேண்டுவது அவசியமில்லை; 'அவர்களது முன்னோர்முதல் வளர்ந்து வந்திருக்கும்படியான இந்திய நாகரிகமே இந்தியமக்களுக்குப்பொருத்தமுடையது' என்பது யாவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய தகுதியிலிருக்கிறது. உண்மையான தேசாபிமானி 'தனதுபாஷைதேசசரித்திரம் இலக்கியம் தொழில் தத்வவுணர்ச்சி மதவுணர்ச்சி மனோதத்வம் உன்னதக்கொள்கை ஆகிய இவையே கல்வியில் பிரதான ஸ்தானத்தைப் பெற்றிருக்கவேண்டு'மென்று விரும்புவதை நாம் தள்ளிவிடக் கூடாது; அவசியம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இந்தியன் மனதிலிருந்து தக்ககல்வி வெளிப்படுத்தப்பெற்றால், அவனது பரம்பரா ப்ராப்தமான வம்ச வழக்கவொழுக்கங்களும் ஸன்மார்க்கப்பிரவர்த்தியும் வெளிப்படுமேல்லாமல், வேறு எது வெளிப்படக்கூடும்? இதர பாஷையைக் கொடுத்துக் கொடுத்து நெட்டுருவேற்றச் சொன்னாலும், உண்மை இந்தியனுடைய மனமானது தனது பரம்பரைக்குணங்களையொழித்து நிற்குமா? அறிவு என்பது, கிழக்குப்பாஷையால் கொடுக்கப்பெற்றாலும் மேற்குப் பாஷையால் கொடுக்கப்பெற்றாலும், அறிவேயன்றி வேறல்ல; ஆனால், முறைமாத்திரம் சுதேசமுறையாக இருக்கவேண்டும்.



படிப்பின் முறையெல்லாம், தேசத்தைப்பற்றிய உண்மையான அறிவின் வழிகளில் செலுத்தப்பெறாமல், அவற்றைப் பாழ்படுத்தக்கூடியதும் உட்கலகத்தையுண்டாக்கக்கூடியதுமாக இருக்குமானால், எப்படி ஒருஇந்தியமனது தனது பரம்பரை யாசாரங்களைப் பற்றியிருக்க முடியும்? ஒரு இந்தியமாணவன் அன்னிய வழக்கவொழுக்கங்களைக்கைப்பற்றி நடக்கும்படி தூண்டப்பட்டானானால், எப்படி அவன்வாழ்வு சுகநிலையில் இருக்க முடியும்? ஆகையால் சுதேசமுறையே உத்தமோத்தமமானது. இந்த முயற்சி நடைபெற்றுவருகின்றதானாலும், தேசவாழ்வைக்கெடுக்கக்கூடிய முறையாகிய ஆங்கிலமுறையை அடியோடு நீக்கிவிட வேண்டும்.

---

### மேலைச்சிவற்பட்டி.

கார்த்திகை-மீ' கரு உ

இரண்டுவாரமாகப்பெய்த மழையினால் சில வீடுகளும் சிலவீடுகளின் சுவர்களும் விழுந்துவிட்டன. இன்றுதான் கதிரவன் கண்விழித்துப் பார்த்திருக்கிறார். மணிமுத்தாநதியில் ஜலம்லேசாகவந்துகொண்டிருக்கிறது.

தெருக்களில் தீபவசதியின்மையால் பொதுஜனங்கட்கு நிரம்பக் கஷ்டமாகவிருக்கிறது. தருமசீலர்கள் கவனிப்பார்களாக.

சோ. அண்ணாமலைசெட்டியார்.

---

### கண்டனூர்.

கார்த்திகைமீ' கஅ உ

இவ்வூர் சிவகைங்கரியச் செல்வர்களாகிய நகரத்தார்களால் அமைக்கப்பெற்ற சிவன்கோவிலில் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுவாளுக்கும் மற்ற எல்லாசுவாமிகளுக்கும் வழக்கம்போல் கார்த்திகை மாதம் சோமவாரந்தோறும் வெகு சிறப்பாக அபிஷேக அலங்காரங்கள் நடந்து வருவதோடு கடைசி சோமவாரமாகிய உஅ உ அன்று இரவு மேற்கண்ட எல்லாசுவாமிகளுக்கும் வழக்கம்போல் கண்குளிரக்கண்டுகளிக்கும்படியாக அபிஷேகங்களாலும் ஆபரணங்களாலும்புஷ்பங்களாலும் வெகுசிறப்பாக நடைபெறுவதோடு பிராகாரங்களைச் சுற்றிலும் தீபங்களால் நிறைக்கப்பெற்றும் அநேக ரிஷபவாகனாரூடராய் சுவாமி திருவீதி யெழுந்தருளிவருவது சிறப்பாயிருக்கும். அவ்வமயம் எல்லோரும் வந்து தெரிசித்துய்யுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

ராம. சுப. வே.
லெட்சுமணன் செட்டியார்.

---

### நமது பலசரக்குக்கடை.

அஞ்சாநெஞ்சன் எழுதுகிறார்:—

நமது மணிபர்ஸ் தாத்தாவை நேற்றுச் சந்திக்க நேர்ந்தது. ஆனால் முன்பார்த்தபோதிருந்த முகச்செழிப்பும் உத்சாகமும்முகத்தில்ஜ்வலிக்கவில்லை. ஆனால் துக்கமும் சலிப்பும் நிறைந்திருந்தன. அப்படியிருந்ததற்குக் காரணம் எனக்கு மிக நன்றாகத் தெரியுமானாலும் நான் அதைக்காட்டிக் கொள்ளாமல், "ஐயா! என்ன சேதி? சௌக்கியந்தானா" வென்று கேட்டேன். மிகுந்த வருத்தத்தோடு ஈன ஸ்வரத்தில் நாக்குழறி மெய்யெலாம் மிகநடுக்குற்று, "ஐயா என்ன சொல்வேன்? சௌக்யமேது; இழவேது. செத்துப்போனால்தான் சவுக்கியமாயிருக்கும்" என்றார். என்ன ஐயா! இப்படிச்சொல்லுகிறீர்கள். உங்கட்கென்ன பணமில்லையா? பெரிய வீடில்லையா? பிள்ளை குட்டிகளில்லையா? உற்றாருறவினரில்லையா? கிராமம் பூமியில்லையா? புதுப்பெண்டாட்டியில்லையா? யாதுகுறை? ஏன் மிக வருந்துகிறீர்கள்." என்றுகேட்டேன். அவருக்கு வெட்கம் ஒரு புறம்; ஆத்திரமொரு புறம். "வேறு ஒன்றிலும் குறைவில்லை; ஆனால், அவன்வீட்டிலே கலியாணஞ் செய்துகொண்டேனல்லவா? அந்தக்கழுதையை; அது சனியனாக வந்திருக்கிறது. என்னைக் கொஞ்சங்கூட மதிக்கிறதில்லை; யார் வந்துகேட்டாலும் கிழவனைக்கேளுங்கள் என்று சொல்கிறது; நேற்று நேரே சொல்லிவிட்டது; காலையில் எழுந்திருந்தால் கிழவன் கிடக்கிறானே என்று ஒரு பலகாரம்செய்கிறதில்லை; வீட்டுவேலையையும் பார்க்கிறதில்லை; சீவிமுடிக்கவும் பொட்டு வைக்கவும் வருகிறவர்களுடன் சிரித்து விளையாடவுந்தான் பொழுது சரியாயிருக்கிறது. விசேஷக்காரர்வீடு வந்துவிட்டால் இளவட்டங்களோடு அலங்காரஞ்செய்துகொண்டு புறப்பட்டுவிடுகிறாள். என்னவாகிலும் கேட்டால், எதிரேநின்று சிரிக்கிறாள். ஏனென்றால், நான் பேசுகிறதைப் பார்த்தால் சிரிப்புவருகிறதாம். வீட்டு வேலையைக் கொஞ்சங்கூடக் கவனிக்காதபடியால், சமையற்காரன் வைத்திருக்கிறேன்; அவன்தான் பொங்குகிறான். ஏன் இந்தச்சனியனைக் கலியாணம் செய்துகொண்டோமென்று வருத்தமாயிருக்கிறது." என்று சொன்னார். எனக்கு ஐயோ! பாவம் என்று தோன்றியது. ஆனால் இந்தக் கிராக்கியில் ஒரு பெண்ணை உபயோகமில்லாதுசெய்து விட்டாரே யென்று கோபமும் வந்தது. "ஐயா! இந்தப் பெண் இருக்கட்டும். பணந்தான் இருக்கிறதே. நல்லபெண்ணாகப்பார்த்து வேறொன்றைக் கலியாணஞ் செய்து கொள்ளுங்கள்; சௌகரியமாயிருக்கும்" என்றேன். "அடே! அப்பா!! இனியொரு பெண்ணை நினைக்கவா? சிவசிவா!!! அது முடியாது. செத்தாலும் இன்னொரு பெண்வேண்டவேவேண்டாம்." என்றார். 'வயதான பிறகு காட்டுக்குப் போய்த்தவம் செய்வதுதான் சுகம்" என்று நூல்கள்கூறுகின்றன; அப்படிக்கில்லாமல் இளம்பெண்ணைக் கலியாணம்செய்துசுகமனுபவிக்க அறுபதாவதுவயதில் விரும்பினால், எங்கிருந்துகிடைக்கும்? துக்கந்தான். உங்கட்கு இன்னொருமுறை பல் வரிசையாக முளைக்குமா? "பெப்பெப்பே" என்றுபேசினால்சின்னப்பிள்ளைகளுக்குச்சிரிப்பு வராமலென்ன செய்யும்? அதற்காக வருத்தப்படுவதி லொன்றுமில்லை. இளம் பெண்களைக் கட்டழகும் கெம்பீரமான பார்வையும் உடைய இளம்புருஷனுக்குக்கலியாணம் செய்து கொடுத்தால்தான் ஒழுங்காகவிருக்கும். கிழவர்களைக் கட்டிவைத்தால் ஒருநாளும் ஒழுங்காகப்போகாது. நீங்கள் செய்தது தவறான காரியம். அநுபவிக்கிறீர்கள். யாரென்னசெய்யலாம்? தாத்தா! இன்னொன்று! தாங்கள் இறந்தபிறகு அந்தப்பெண் அழக்கூட வரமாட்டாள் போலிருக்கிறதே" என்றேன். வந்துவிட்டது கோபம்! "அதென்ன அப்படிச் சொல்கிறாய்? நானிருந்ததென்ன? வாழ்ந்ததென்ன? இந்தத் தரங்கெட்டபயல் வீட்டுப்பெண்ணைக் கொண்டது முதல் கொஞ்சப்பாடா படுகிறேன்! உயிரோடிருக்கிறபோதே நேரில் நின்று கேலி பண்ணுகிற இவள், நான்செத்தபிறகு அழுதாலென்ன? சிரித்தாலென்ன? எப்படியாவது தொலையட்டும்" என்றார். முன்னொரு முறை சந்தித்தபோது "அழுவதற்காவது ஒரு மனைவி வேண்டாமா" என்று சொல்லிய இவர், இப்பொழுது இவ்வளவு வெறுப்படைந்து பேசுகிறார். இப்பொழுதிருக்கிற புத்தியை இவருக்கு கொஞ்ச நாள் முன் கொடுக்காமற் போயினையே! பரமேசா!

---

### சந்தாவிபரம்.

| | | | |
|---|---|---|---|
| இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு ஆஉ ஒன்றுக்கு ... | ச | 0 | 0 |
| சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்கு ஆஉ ஒன்றுக்கு... | ரு | 0 | 0 |
| தனிப்பிரதி ஒன்றுக்கு ... | 0 | க | கூ |

### விளம்பர விகிதம்

| | | | |
|---|---|---|---|
| மாதம் க-க்கு பத்தி க-க்கு ... | உ0 | 0 | 0 |
| ஷை அரைப்பத்திக்கு ... | கக | 0 | 0 |

மானேஜர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்.
காரைக்குடி.

